12th September 1958]

arrive. The Mills have been sanctioned a loan of Rs. 55 lakhs by the Industrial Finance Corporation of India. This Government have also invested Rs. 10 lakhs in the share capital of the Mills. The Society has been allotted iron and steel, cement and other building materials required by it.

(*b*) The factory is expected to commence production in 1959–60 crushing season.

MR. SPEAKER : It is now 10-10 a.m. The rest of the questions will be printed in the proceedings. 10-10 a.m.

SRI P. G. MANICKAM : On a point of order, Sir, 203—R கேள்வியை நாளை எடுத்துக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : It cannot be a point of order. It is only a request. We will take up question No. 203-R tomorrow.

SRI R. SRINIVASA IYER : Sir, the rest of the questions may be taken up tomorrow.

MR. SPEAKER : If the House has no objection, all the remaining questions will be taken up tomorrow. But that cannot form a precedent and it is allowed only in respect of these questions.

Questions are over.

* SRI A. V. P. ASAITHAMBI : இச்சபை நடவடிக்கைகள் பெரும் பாலும் தமிழில் நடைபெறுவது தங்கள் கையில் இருப்பதாக சர்க்கார் கட்சித் தலைவர் அவர்கள் சொன்னார்கள். ஆகவே, சபாநாயகர் அவர் கள் கூடுமானவரையில் எல்லா அங்கத்தினர்களையும் தமிழிலேயே பேசும் படிக் கேட்டுக்கொள்வதோடு, "நாம் தமிழர்" இயக்கத் தலைவரையாவது தமிழில் பேசும்படிச் சொல்வார்களா ?

MR. SPEAKER : அதை நான் சொல்ல முடியாது. யார் யார் எந்த பாஷையில் பேச விரும்புகிறார்களோ அந்த பாஷையில் பேசலாம். என்னால் முடிந்தவரையில் நான் தமிழிலேயே பேசுகிறேன்.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II.—ANNOUNCEMENT BY THE HON. SPEAKER *RE* THE MADRAS CHILDREN (AMENDMENT) BILL, 1958.

MR. SPEAKER : I have to announce that the Madras Children (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 10 of 1958) has been passed by the Madras Legislative Council on 10th September 1958 without any amendment.

## III.—USE OF THE WORD 'CHEATING'.

SRI M. KALYANASUNDARAM : நேற்று தாங்கள் சபையில் இல்லாத சமயத்தில் சில வார்த்தைகள் இந்த சபையில் அடிபட்டன. யார் பேசினார் என்று நான் குறிப்பிட்டுச் சொல்ல விரும்பவில்லை. "சீட் டிங்" என்ற வார்த்தை உபயோகிக்கப்பட்டது. "சீட்டிங்; என்பது இந்த சட்டசபை ஒழுங்கிற்கு விரோதமான வார்த்தை. "ஏய்க்கிறது" என்ற வார்த்தை இருதரப்புகளில் இருந்தும் உபயோகிக்கப்பட்டது என்பது

[Sri M. Kalyanasundaram] [12th September 1958

எனது ஞாபகம். யார் அதை உபயோகித்திருந்தாலும் இது இச்சபையின் ஒழுங்கிற்கு விரோதமான வார்த்தை. அதை எச்சந்தர்பத்தில் குறிப்பிட்டார்கள் என்பதை பற்றி நான் இப்பொழுது இங்கு குறிப்பிட விரும்பாவிட்டாலும்; எதிர்கால சட்டசபை நடவடிக்கைகளுக்கு உதவிகரமான முறையில் இருப்ப தற்கு அப்படிப்பட்ட வார்த்தைகள் இந்த சபையின் ஒழுங்கிற்கு பொருத்த மாகுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

**Mr. SPEAKER :** The use of the word 'cheating' is bad. "சீட்டிங்" என்று சொல்வது இந்த சபையின் ஒழுங்கிற்கு சரியல்ல. நடந்தது நடந்து விட்டது. இனிமேலாவது அப்படிப்பட்ட வார்த்தைகளை உபயோகிக்கக்கூடாது என்று சொல்லிக்கொள்கிறேன்.

**Sri P. S. K. LAKSHMIPATHIRAJ :** நேற்று கருணாநிதி அவர்கள் இந்த சபையில் பேசும்போது சூரியனை விரும்பாதவர்கள் கள்ளர்கள் என்றும், கற்பை விலக்கு விற்பவர்கள்தான் சூரியனை இகழ்வார்கள் என்றும் சொன்னார்கள். அவர் பேசும்போது நேற்று நீங்கள் இங்கு இல்லை. ஆகவே அதை உங்கள் கவனத்திற்கு கொண்டு வர விரும்பு கிறேன்.

**Mr. SPEAKER :** அப்பொழுது யார் சேரில் உட்கார்ந்திருந்தார்களோ அவரிடம் கேட்டிருக்க வேண்டும். அதைப் பற்றி நான் இப்பொழுது ஒரு தீர்ப்பு கொடுக்க முடியாது.

**Sri P. S. K. LAKSHMIPATHIRAJ :** அவ்வார்த்தைகளை சபை நடவடிக்கைகளிலிருந்து எடுத்து விடும்படி கேட்டுக் கொள்கிறேன்.

**Mr. SPEAKER :** எனது ரூமிற்கு வந்து பேசுங்கள், அதைப்பற்றி.

**Sri M. R. KANDASWAMI MUDALIYAR :** அத்தீர்மானம் பற்றிய விவாதம் இன்னும் தீரவில்லை. ஆகவே. .

**Mr. SPEAKER :** அப்படிப்பட்ட வார்த்தைகளை உபயோகிப்பது சரியல்ல.

## IV.—CALLING ATTENTION TO THE BEEDI WORKERS' STRIKE IN TIRUCHIRAPPALLI.

**Mr. SPEAKER :** Now the hon. Member, Sri M. Kalyanasundaram, will call the attention of the Hon. Minister for Industries to the dispute between the workers and employers in the beedi industry in Tiruchirappalli, under rule 40 of the Assembly Rules.

**Sri M. KALYANASUNDARAM :** கனம் சபாநாயகர் அவர்களே, பீடித் தொழில் சம்பந்தமாக ஒரு மசோதா வரவிருக்கும் இத்தருணத் தில் நான் இது சம்பந்தமான ஒரு பிரச்னையை இங்கு கொண்டு வர நேர்ந்து இருப்பது துரதிருஷ்டவசமானது தான். திருச்சி நகரத்தில் கடந்த ஐந்தாம் தேதியில் இருந்து கிட்டத்தட்ட 20,000 பீடித் தொழிலாளர்கள் வேலை செய்யாமல் இருந்து வருகிறார்கள். வேலை நிறுத்தம் அமைதி யாக நடைபெறுகிறது. இதில் முக்கியமான பிரச்னை, கூலி உயர்வு சம்பந்தமானதாகும். திருச்சி நகரத்தில் ஆயிரம் பீடி சுற்றுவதற்கு கூலி ரூபாய் 1—8—0 கொடுக்கப்படுகிறது. நமது ராஜ்யத்திலேயே மிகக் குறைவான கூலி கிடைப்பது திருச்சியில்தான். திருநெல்வேலியில் கூலி குறைவு என்று சிலர் சொல்லலாம். சம்பளப் பிடித்தம் போன்றவைகளை எடுத்துப்பார்க்கும்போது திருச்சியில்தான் கூலி குறைவாகக் கிடைக்கிறது என்பது தெரிய வரும். திருச்சியில் இருக்கக்கூடிய பீடி முதலாளிகள் இம்மாகாணத்தில் மிகப் பெரிய செல்வாக்கு உடையவர்கள். அவர்கள், மினிமம் வேஜஸ் கமிட்டி சிபார்சு செய்வதைக் கூட தடை செய்ய வேண்டு மென்றும், அதற்கு ஒரு இடையூறு செய்யவேண்டுமென்ற நோக்கத் தோடு பிடிவாதமாக சமரசம் பேச முன்வர மறுக்கிறார்கள். கலெக்டர் முதல் லேபர் ஆபீஸர் வரையில் எல்லோரும் சமரசம் பேச